# பீமசேன மகாவீரன்



இது

சென்னை ஹைகோர்ட், டிரான்ஸ்லேடர்

எஸ். கலியாணசுந்தர ஐயர்

எழுதியது.






மாக்மில்லன் அண்டு கம்பெனி, லிமிடெட்.

மதராஸ், பம்பாய், கல்கத்தா, லண்டன்.

1928

 [விலை 3 அணா

# முன்னுரை

நல்ல பழக்கமோ கெட்ட பழக்கமோ இளமையில் ஏற்பட்டுவிட்டால் அது பெரும்பாலும் பிற்காலத்தில் மாருது. இதுபற்றியே இளைஞர்களுக்கு நல்ல நீதிகளைக் கற்பிக்க வேண்டுமென்று பெரியோர்கள் எண்ணியிருக்கிருர்கள். நீதிகளைமட்டும் போதித்தால் அவர்கள் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். சிறுகதைகள் மூலமாகச் சொன்னுல் அவர்களுக்கு நன்ருக மனத்திற்படும்; பிற்காலத்தில் மறக்கவும் மாட்டார்கள். தெய்வபக்தி, பரோபகாரம், அன்னமளித்தல், நன்றிமறவாமை, அன்பு, பெற்ருேர்க்கு அடங்கியிருத்தல், பொறுமை, கற்பு முதலிய சிறந்தகுணங்கள் அமைந்த உத்தமர்கள் உத்தமிகளுடைய சரித்திரங்கள் எத்தனையோ உள்ளன. அவற்றிலிருக்கும் சிலசில பகுதிகளை இளைஞர்களுக்கு விளக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் இது போன்ற சிறு புஸ்தகங்கள் எழுதப்பெற்று வருகின்றன. இந்தப் புஸ்தகத்தில், பஞ்சபாண்டவர்களில் ஒருவனுன பீமசேன மகாவீரனுடைய சரித்திரத்திலிருந்து சில பகுதிகள் அமைக்கப்பட்டுள்ளன. இப்புத்தகத்தைப் படிப்பதால் அவனுடைய சிறந்த வீரச்செயலும், பரோபகாரமும், குந்திதேவியின் மேம்பாடும், திரௌபதியின் சிறந்த கற்பும் விளங்கும்.

## சூசிபத்திரம்

# பீமசேன மகாவீரன்

## I. பகாசுரவதம்

இந்தியாவின் வடக்கே கங்கை நதிக்கரையில் வேத்திரகீயம் என்னும் அழகான ஊர் ஒன்று உண்டு. அது முந்நூற்றுக்கு மேலான வீடுகளை உடையது. அந்த வீடுகளுள் ஒன்றுமட்டும் மற்றவைகளை விட மிகவும் உயரமாகவும் அழகாகவும் கட்டப்பட்டிருந்தது. அதில் சுதர்மசர்மன் என்னும் அந்தணன் ஒருவன் தன் மனைவியுடன் வசித்து வந்தான். அவனுடைய மனைவியின் பெயர் சுவர்ணமுகி.

சுதர்மசர்மன் தெய்வபக்தி நிறைந்தவன். பசித்தவர்களுக்கு ஒருதடையுமின்றி அன்னம் அளிப்பவன்.

சுவர்ணமுகியோ கணவனைத் தவிர வேறு தெய்வமில்லையென்னும் கொள்கை உள்ளவள். அவனுக்கு விருப்பமில்லாத காரியத்தை ஒருபோதும் அவள் செய்யமாட்டாள். சுதர்மசர்மனுக்கு அவளிடமாக ஒரு மகன் பிறந்தான். பெற்றோர் இருவரும் மகனை மிகவும் அருமையாக வளர்த்து வந்தார்கள். அவனும் பெற்றோரிடத்தில் மிக்க பக்திகொண்டவன்.

ஒவ்வொருநாளும் சுதர்மசர்மன் தான் சாப்பிடுவதற்கு முன் வீட்டுக்கு வெளியே வந்து யாரேனும் புதியவர்கள் வந்திருக்கிறார்களா என்று கவனிப்பான். வந்திருந்தால் அவர்களை உள்ளே அழைத்துப் போய் அவர்களுக்கு உணவளிப்பான்; பிறகே தான் உண்பான்.

ஒருநாள் வழக்கம்போல் அவன் வெளியே நின்று யாரேனும் வருகிறார்களாவென்று கவனித்தான். அப்பொழுது ஆறுபேர்கள் வந்தார்கள். அவர்களில் ஐவர்கள் பஞ்சபாண்டவர்கள்; மற்றொருத்தி அவர்களுடைய தாயாகிய குந்திதேவி. அவர்கள் வரவால் சந்தோஷம் அடைந்த சுதர்மசர்மன், 'நீங்கள் எல்லாரும் என் குடிசையில் சில காலம் தங்கியிருந்தால் நான் மேன்மையடைவேன்' என்றான். உடனே அவர்கள் அதற்கு இணங்கி அவனுடைய மாளிகைக்குள்ளே சென்றார்கள். சுதர்மசர்மனும் சுவர்ணமுகியும் அவர்கள் புதல்வனும் வந்தவர்களை மிக்க அன்புடன் உபசரித்தார்கள். அந்த ஆறுபேர்களும் சுதர்மசர்மனுடைய மாளிகையிலேயே பல தினங்கள் சுகமாக

இருந்துவந்தார்கள். குந்தியும் சுவர்ணமுகியும் மிகவும் சிநேகமாகப்பழகிவந்தார்கள். பஞ்சபாண்டவர்களும் சுதர்மசர்மனிடத்தில் அவ்விதமே பழகிவந்தார்கள். இப்படி இருக்கையில் ஒருநாள் நடு நிசியில் எல்லாரும் அயர்ந்து நித்திரை செய்தார்கள். அப்போது அழுகைக் குரல்ஒன்று கேட்டது. தூங்கினவர்கள் தூக்கம் கலைந்து கவனிக்கையில் அது சுவர்ணமுகியின் குரலாக இருந்தது. உடனே குந்தி அவளிடம் சென்று, "பெண்ணே! ஏன் அழுகிறாய்? இந்த நடுநிசியில் என்ன ஆபத்து நேரிட்டது? என்னிடம் சொல்லு. செய்யக்கூடியதை நான் செய்து உன் துக்கத்தை மாற்றுவேன்." என்று சொன்னாள். சுவர்ணமுகியோ, "அம்மா, நான் என்ன சொல்வேன்? என் துக்கம் மனிதர்

களால்போக்கக்கூடியதன்று. என் மகனை ஓர் அசுரனுக்கு நாளைத் தினம் பலிகொடுக்கவேண்டும். நான் என்ன செய்வேன்! ஏ, குழந்தாய், கண்மணி" என்று பலவாறு புலம்பியழுதாள். குந்தி திடுக்குற்று மயங்கி வருத்தமடைந்தாள். பிறகு அசுரனுடைய வரலாற்றைச் சொல்லும்படி அவளைக் கேட்டனள்.

அப்போது சுவர்ணமுகி, "அம்மா, சொல்லவும் எனது நாஎழவில்லையே! நாங்கள் எல்லோரும் இந்த ஊரில் சுகமாக வாழ்ந்து வந்தோம். சில காலத்துக்குமுன்பு பகாசுரன் என்னும் கொடியவன் எங்களூரில் புகுந்து ஜனங்களையெல்லாம் மிகவும் துன்பப்படுத்தினுன். தன் மனம் போனபடியே ஜனங்களை வதைத்துக்கொண்டு வந்தான். அவன் செய்த தீமை ஜனங்

களால் தாங்கமுடியவில்லை. அவன் அதேமாதிரி பின்னும் சிலநாள் செய்திருந்தால் ஊரே பாழ்த்திருக்கும். ஆனால், ஜனங்களெல்லாரும் கலந்து யோசனை செய்தார்கள். முக்கியமானவர்கள் புறப்பட்டுப் பகாசுரனிடம் சென்று அவனை வந்தனம் செய்து, 'பெரிய சூரரே, உம்முடைய பராக்கிரமத்தையும் பலத்தையும் நாங்கள் நன்ருக அறிந்தோம். நாங்கள் எல்லோரும் உமக்கு அடிமைகள். நீர் மனம்போனபடி கணக்கில்லாமல் ஜனங்களை வதைத்துவருவதை நிறுத்தவேண்டும். எங்களுக்குள் முறைவைத்துக் கொண்டு ஒவ்வொருநாளும் ஒரு வண்டி நிறைய ஆகாரத்தையும் 4 எருமைகளையும் ஒரு மனிதனையும் தவருமல் உங்களிடம் அனுப்பிவிடுகிருேம். நீர் இதில் திருப்தியடை

ந்து எங்கள் ஊருக்குள்ளே புகாமல் இருக்கவேண்டும். இதுவே எங்கள் பிரார்த்தனை' என்று கேட்டுக் கொண்டார்கள். பகாசுரனும் அதற்கு இணங்கினான். இது வரையில் எத்தனையோ பிள்ளைகள் பலியானார்கள். நாளைத் தினம் எங் கள் வீட்டு முறை. நான் என்ன செய்வேன்!" என்று புலம்பிக்கொ ண்டு கீழே விழுந்தாள்.

அப்போது குந்தி சிறிதுநேரம் யோசனைசெய்து சுவர்ணமுகியை நோக்கி, "பெண்ணே, எழுந்திரு. கவலைப்படவேண்டாம். உன் மக னுக்குப்பதிலாக என் பிள்ளைகளுள் ஒருவனை அனுப்புவேன்" என்று கூறினாள். ஆனாலும், அவள் குந் தியைப் பார்த்து, "நான் இதற்கு எப்படி ஒப்புவேன்? அவரவர்கள்

பிள்ளை அவரவர்களுக்கு அருமைதானே'' என்றனள்.

குந்தி, "ஒருவிதமான தடையும் செய்யாதே. உனக்கு இருப்பது ஒரே பிள்ளை. எனக்கு ஐந்து பிள்ளைகள் இருக்கிறார்கள். அதனால்தான் என் பிள்ளைகளுள் ஒருவனை அனுப்ப எண்ணினேன்" என்றாள்.

அப்போது சுதர்மசர்மன், "ஐந்து பிள்ளையாயிருந்தால் என்ன? ஒரு பிள்ளையாயிருந்தால் என்ன? பிள்ளை பிள்ளைதானே. நீங்கள் எல்லோரும் என் வீட்டுக்கு விருந்தாக வந்தவர்கள். உங்கள் பிள்ளையை நான் காட்டிக்கொடுப்பது தர்மமாகுமா?" என்று சொன்னான். அது கேட்ட குந்திதேவி, "பிராமணோத்தமரே! நானாகச் சொல்லும்போது உமக்கு ஒரு பாவமும் ஏற்

படாது. நான் அனுப்ப எண்ணி யிருக்கும் மகன் மிகுந்த பலவான். அவன் போனால் அசுரனைக் கொன்றுவிட்டே வருவான். இன்றைத்தினம் அவன் வண்டியை ஓட்டிக்கொண்டு போய்வரட்டும்" என்று கூறினாள்.

கூறுகையில் பீமசேனன் குந்தி இருந்த இடத்துக்கு வந்து சேர்ந்தான். குந்தி பீமனை நோக்கி, "பீமா, இந்த வீட்டில் உள்ளவர்கள் இவ்வளவு நாளாக நம்மை ஆதரித்து வருகிறார்களே. அவர்களுக்கு ஒரு கஷ்டம் இப்போது நேர்ந்திருக்கிறது. அதை எப்படியாவது போக்கவேண்டும். நீ இன்று இந்த ஊருக்கு வெளியில் இருக்கும் பகாசுரனிடம் சென்று அவனைக் கொன்றுவிட்டு வா. இவர்

களுடைய ஒரே பிள்ளையை நீ காப்பாற்றினவனுவாய்'' என்றனள்.

பீமசேனன் ஒரு தடையும் சொல்லாமல் அதனை ஒப்புக்கொண்டான். "அம்மா, உன்னுடைய ஆசிர்வாதம் இருக்கையில் எனக்கு என்ன குறைவு ஏற்படும்? இவர்கள் எல்லாரும் தைரியமாக இருக்கலாம். நான் அந்த இடத்துக்கு எப்போது புறப்படவேண்டும்? சொல்'' என்று பீமன் குந்தியைக் கேட்டான். அப்போது சுவர்ணமுகி மிகுந்த துக்கத்துடன், "இன்று தான் என் மகன் போகவேண்டிய தினம்'' என்று உரைத்தாள்.

பீமசேனன் புறப்படுவதற்கு ஆரம்பித்தான். சுதர்மசர்மனுடைய வீட்டில் பகாசுரனுக்கு அன்றைத் தினம் அனுப்பவேண்டிய உணவுகள் சித்தமாயின. கொழுத்த

நான்கு எருமைக் காளைகள் பூட்டிய ஒரு பெரிய வண்டி சுதர்ம சர்மன் வீட்டுக்கு எதிரே வந்து நின்றது. ஒரு பெரிய கொப்பரை நிறைய அன்னம் வைக்கப்பட்டது. அதற்குத் தக்கபடி பருப்பு, குழம்பு, ரசம், தயிர், ஊறுகாய்கள், தொகையல்கள், கறிகள், பக்ஷணங்கள் முதலியன வேறு வேறு பாத்திரங்க்ளில் வைக்கப்பட்டன.

பிறகு பீமன் தன் தாயாரிடமும் சகோதரர்களிடமும் விடை பெற்றுக்கொண்டான். வண்டியின் அருகே வந்து அதன்மேல் ஏறி உட்கார்ந்தான். அவனே வீதிவழியாக வண்டியை ஓட்டிக்கொண்டு போனான். ஜனங்கள் எல்லோரும் பீமனை நோக்கி ஆசீர்வாதம் செய்தார்கள். பீமசேனன் எல்லோருக்கும் வணக்கத்துடன் அஞ்சலி செய்

தான். சிறிது நேரத்துக்குள் அவன் பகாசுரன் இருந்த காடு வந்து சேர்ந்தான்.

காடு சேர்ந்தவுடனே பீமன் மிகவும் உயரமான வடிவத்தோடு விளங்கினான். என்ன விதமான உருவம் வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாமென்று அவன் வரம் பெற்றிருந்தான்.

ஒரு மலையடிவாரத்தில் பகாசுரன் உட்கார்ந்திருந்தான். மலையின் அருகே, பெரிய குளமொன்று காணப்பட்டது. பகாசுரனுடைய கண்கள் இரண்டும் நெருப்பு உருண்டைகள் போல் பிரகாசித்தன. பல்லை நற நற வென்று கடித்தான். வாயினின்றும் நுரை ததும்பிற்று. சாப்பாட்டு வேளை தாண்டியும் ஆகாரம் வரவில்லையா

தலால் அவனுக்கு மிக்க கோபம் வந்துவிட்டது.

பீமசேனன் வண்டியை நிறுத்தி மாடுகளை அவிழ்த்துவிட்டான். பிறகு அவன் வண்டியிலிருந்து ஆகாரவகைகளையெல்லாம் எடுத்து ஒரு பாறையில் வைத்தான்; அதில் உட்கார்ந்துகொண்டு அவற்றையெல்லாம் தானே புசிக்கலானான்.

இப்படியிருக்கையில், வழக்கம்போல் வண்டி வருகிறதா என்று பகாசுரன் மலையின்மேல் ஏறிப்பார்த்தான். தன் எதிரே ஒருவன் தன்னுடைய ஆகாரங்களை யெல்லாம் புசிப்பதைப் பார்த்து ஆச்சரியமடைந்தான்; இடி முழக்கம்போல் கர்ச்சனை செய்தான். பீமசேனன் இருந்த இடத்துக்கு வேகமாக வந்தான். அவனுடைய முதுகில் தன்



பகாசுரன் பீமனை நோக்கிவருதல்

கையால் பலமாகக் குத்தினான். விலாப்புடைக்க உண்ணும் பீமனுக்கு அந்தக் குத்து ஆகாரம் ஜீரணமாவதற்கு மிகவும் அனுகூலமாக இருந்தது. பீமசேனன் கடைசிக் கவளத்தைச் சாப்பிடும் வரையில் பேசாமல் இருந்தான்.

சாப்பிட்டு முடிந்தபிறகு பீமன் அசுரனைக் கவனிக்கலானான். பகாசுரன் பீமனை நோக்கி, "யாரப்பா நீ! என் காட்டில் எனக்கு வந்த ஆகாரத்தை என் எதிரில் பயமில்லாமல் உண்பவன்! இன்றோடு உன் வாழ்வு முடிந்தது. என்ன செய்கிறேன் பார்" என்று அவன்மேல் பாய்ந்தான். முதலில் பீமன் கொஞ்சம் ஒதுங்கிக்கொண்டான். பிறகு பகாசுரனுடைய இரண்டு கால்களையும் பிடித்துத் தூக்கி அவனைச் சுழற்றி யெறிந்தான்.

அசுரன் பூமியில் குப்புற விழுந்தான். உடனே பீமன் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அவன் முதுகில் ஏறி உட்கார்ந்து தன் பலமான கைகளால் அவன் கழுத்தைத் திருகினான்.

பிறகு பீமன் அவனை நோக்கி, "ஏ, மகாபாதகா! ஜனங்களைக் கொல்லும்படி உனக்கு யார் கற்றுக்கொடுத்தார்? உன் வாழ்வெல்லாம் இன்றோடு முடிவாகிறது" என்று அவன் தலையைச் செவ்வையாக அடித்துக்கொண்டே சொன்னான்.

பகாசுரனோ, "நான் உன்னைப் போல் இழிவான மனித வர்க்கத்தைச் சேர்ந்தவனோ! ஒவ்வொருவனும் அவனவனுக்கு எது வழக்கமோ அதைச் செய்கிறான். எப்படி அது தீமையாகும்?" என்று

பதில் உரைத்தான். இவ்விதம் சொல்லிக்கொண்டே பீமசேன னிடமிருந்து தப்புவதற்கு அவன் தன் உடம்பை அசைத்துப் பார்த் தான். பீமனே அவனை நகர வொட்டாமல் தடுத்து, "ஏ, மூடாத் மா, பார்வைக்கு நல்லவனைப் போல் இருக்கிறாய். பாவமே உன் வடிவமாக இருக்கிறது. யாராயி னும் ஒவ்வொருவனும் தன் மனத் தைக் கெட்ட காரியங்களில் விடா மல் பார்த்துக்கொள்ளவேண்டும்" என்று உபதேசித்தான்.

இந்த உபதேசம் பகாசுரனுக் குச் செவிடன் காதில் சங்கை ஊது வதுபோல் இருந்தது. அவன், "ஏ, மானிடப்பதரே, உன் உபதேசங் களை நான் கேட்க வரவில்லை. இதோடு நிறுத்து" என்று இடி யிடித்தாற்போல் சொல்லி, அவ

னைத் தன் முதுகிலிருந்து தள்ளி அவன்மேல் பாய்ந்தான்.

பிறகு, இரண்டுபேர்களும் யுத்தம் செய்யலானார்கள். ஒருவரை ஒருவர் அடித்தனர். சுற்றிச் சுற்றி வந்தார்கள். கோபாவேசத்துடன் பகாசுரன் பீமன்மேல் பாய்ந்து அவன் காலைத் தூக்கி ஒரு குளத்தில் வீசியெறிய முயன்றான். பீமனோ அதற்கு இடங்கொடாமல், லாகவத்துடன் ஒதுங்கி, அசுரனுக்குப் பின்புறமாக வந்து அவனைக் காலால் தூக்கி ஒரு பெரிய பாறையின்மேல் மோதினான். உடனே பகாசுரன் துண்டம் துண்டமாய்ப் போனான்; அவன் உயிரும் நீங்கிற்று. பிறகு பீமன் முன்போல் தன் இயற்கை வடிவத்தை யெடுத்துக்கொண்டான்.

அப்போது சூரியன் மறையும் சமயமாயிற்று. வண்டி மாடுகள் வீடுபோய்ச் சேர்ந்தன. "மாடுகள் வந்தனவேயன்றி, பீமசேனன் வரவில்லையே. ஒருவேளை பகாசுரனுக்கு மற்றவர்களைப்போல் அவன் இரையாயிருக்கலாமோ! பகாசுரனைக் கொன்றிருந்தால், மாடுகள் வரும்போது அவனும் வந்திருக்க வேண்டுமே" என்று ஜனங்கள் எண்ணலானார்கள்.

அவர்கள் குந்திதேவியிடம் போய், "ஏ! பெரியம்மா, உம்முடைய மகனால் ஊர் நாசமடையப் போகிறது. உண்மையைச் சொல்லும். பீமசேனன் எங்கே?" என்று கேட்டார்கள். குந்திதேவி அவர்களைப் பார்த்து, "ஏன் கவலைப்படுகிறீர்கள்? பீமசேனன் நிச்சயமாய் வெற்றிபெற்றே வரு



அசுரன் தலையை ஒரு தடியில் எடுத்துக்கொண்டு
பீமன் வருதல்

வான்" என்று கூறினள். வெகு தூரத்துக்கப்பால் நீளமான தடி யொன்றும், அதன் தலையில் ஒரு பெரிய பந்துபோல் ஒரு பொரு ளும் காணப்பட்டன. அந்தத் தடியை எடுத்துக்கொண்டு ஒரு மனிதன் வந்தான். பீமசேனனே பகாசுரனுடைய தலையை அந்தத் தடியில் கட்டி வைத்துக்கொண்டு வந்தான். உடனே ஜனங்கள், "பகாசுரன் மாண்டு போய்விட் டான். அவன் தலையை எடுத்துக் கொண்டு அதோ பீமசேனன் வரு கிறான்" என்று சொன்னார்கள். இந்தச் செய்தி ஊர் முழுவதும் பர விற்று.

பீமசேனன் நகரை நோக்கிவந் தான். "பீமனுக்கு ஜே! பீமனுக்கு ஜே" என்று ஜனங்கள் பலமாகக் கோஷம் செய்தார்கள். அப்போது

பீமசேனன், "என்னால் ஒன்று மில்லை. தெய்வ பலத்தால் நான் வெற்றி அடைந்தேன். என்னு டைய தாய் மிக்க கவலையடைவாள் என்று நினைக்கிறேன்" என்றான். அப்போது அவர்கள், "அந்த அம்மா சிறிதும் கவலைப்படவில்லை. உன்னுடைய பராக்கிரமத்தை அந்தத்தேவி நன்றாக அறிந்திருப் பாளே" என்று சொன்னார்கள்.

பீமனோ சுதர்மசர்மனுடைய வீட்டை நோக்கிச் சென்றான். சுதர் மசர்மனுடைய வீட்டு வாயிலில் பீமனுடைய வரவை ஆவலோடு குந்தி தேவி எதிர்பார்த்துக்கொண் டிருந்தாள். வீடு சேர்ந்ததும் பீமன் பகாசுரனுடைய தலையைக் குந்தியின் பாதத்தில் வைத்து அவ ளை வந்தனம் செய்தான். "கண் மணி! எழுந்திரு. உன் குலதரு

மத்தை நீ காப்பாற்றி விட்டாய். நான் மிகவும் சந்தோஷம் அடைகிறேன்" என்று குந்தி சொன்னாள்.

சுதர்மசர்மனும் சுவர்ணமுகியும் தங்கள் குமாரனைக் காப்பாற்றிய மகாவீரவனைப் பலவாறு வாழ்த்தினார்கள்.

இந்தச் சரித்திரத்தால் நீங்கள் என்ன தெரிந்துகொள்ளுகிறீர்கள்? எது தர்மமோ அந்தக் காரியத்தை நீங்கள் செய்தால் உங்கள் பெயர் என்றைக்கும் அழியாமல் இருக்கும்.

---

## II. கீசகன் வதை

பகாசுரனை வதைத்தபோது பீமசேனன் பிரமசாரியாக இருந்தான். அப்பால் பல வருஷங்கள் சென்றபின் அவனுக்கு விவாகமாயிற்று. அவன் மனைவியின் பெயர் திரௌபதி.

பாண்டவர்களுடைய ராஜ்யத்தைத் துரியோதனன் என்பவன் அபகரித்துக்கொண்டான். பிறகு பாண்டவர்கள் 12 வருஷம் காட்டில் வாசம் செய்தார்கள். அதன் பிறகு அவர்கள், ஒருவரும் அறியாதபடி ஒரு வருஷகாலம் வசிக்க ஏற்பாடு செய்துகொண்டார்கள். அதற்கு அஞ்ஞாத வாசமென்று பெயர். அப்போது பீமசேனன் விராட மன்னனுடைய அரண்மனையில் சமையற்காரனாக அமர்ந்தான். திரௌபதி ராணியின் வேலைக்காரியாக இருந்தாள். அவர்களை ஒருவரும் இன்னாரென்று தெரிந்துகொள்ளவில்லை. அந்தக் காலத்தில் பீமசேனன் பலாயனன் என்ற பெயரை வைத்துக்கொண்டான். திரௌபதி விரதசாரணி யென்ற பெயரை வைத்துக்கொண்டாள்.



விராட மன்னனுடைய அரண்மனை

விராட மன்னன் மிக்க ஐசுவரியம் படைத்தவன். விராட நகரத்தில் அவனுக்கு மிகவும் பெரிய அரண் மனையொன்று உண்டு.

தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை என்னும் நால்வகையான சேனைகளும் அவனுக்கு இருந்தன. சேனைகளுக்கெல்லாம் கீசகனென்பவன் அதிபதியாக இருந்தான். அவன் மகா தைரியசாலி; மிக்க பலமுள்ளவன். அவன் விராட மன்னனுடைய மைத்துனன்.

கீசகனைக் கண்டு பயப்படாதவர்கள் அவன் காலத்தில் ஒருவருமில்லை. ஆயிரம் யானையின் பலம் அவனுக்கு உண்டென்று சொல்லுவார்கள். ஒருவேளை அவன் தன்னையே நாட்டைவிட்டுத் துரத்தி விடுவானோ என்ற பயம் விராட

மன்னனுக்கு இருந்தது. ஆதலால் அரசன் அவனை மிகவும் மரியாதையாக நடத்திவந்தான். கீசகன் பல கொடிய காரியங்களை ஓயாமல் செய்து வந்தான். யார் தடுத்தாலும் அவன் கேட்பதில்லை.

ஒருநாள் கீசகன் தன் சகோதரியான ராணியைப் பார்க்க அரண்மனைக்கு வந்தான். சிறிதுநேரம் அவளோடு பேசிக்கொண்டிருந்து பின் தன் மாளிகைக்குத் திரும்பினான். அப்போது அரண்மனைத் தோட்டத்தில் விரதசாரணியைக் கண்டான். அவளுடைய முகம் செந்தாமரை மலர்போல்இருந்தது. அவளைக் கவனித்த கீசகன் எப்படியாவது அவளைக் கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென்று ஆவல் கொண்டான்; அவளிடஞ் சென்று, "உனக்கு வேண்டிய

ஆடையாபரணங்கள் தருகிறேன். நீ என்னை விவாகம் செய்துகொள்ளு; உனக்கு ஒரு குறையும் இல்லாதபடி பார்த்துக்கொள்வேன். உன்னை ஒரு பெரிய ராணியாகச்செய்வேன். நான் சொல்லுகிறபடியே செய்" என்று சொன்னான். கீசகனுடைய இந்த வார்த்தைகள் கற்புக்கரசியான விரதசாரணியின் காதில் நாராசம்போல் விழுந்தன. அவள் மிகவும் மனம் நொந்து கீசகனை நோக்கி, "நான் விவாகமானவள். எப்படி நான் உன்னை விவாகம்செய்துகொள்வேன். இது தெய்வ சம்மதமாகாது. தகாத காரியத்தை நீ செய்ய விரும்பினால் தெய்வ தண்டனை உனக்கு ஏற்படும்" என்று கோபத்துடன் சொன்னாள்; பிறகு அதிவேகமாக அரண்மனைக்கு ஓடினாள். மகா

பாதகனுகிய கீசகனே அவளைப் பின்தொடர்ந்து வேகமாக வந் தான். ஆனல் விரதசாரணி அவ னிடம் அகப்படாமல் அரண்மனை சேர்ந்து ராணியிடம் சரண் புகுந் தாள். அங்கே கீசகனும் வந்து சேர்ந்தான். நடந்த விஷயங்களை யெல்லாம் கேட்ட ராணி கீசகனை மிகவும் நிந்தித்து, "விரதசாரணி யின் ஞாபகமே உனக்கு இருக்கக் கூடாது" என்று சொல்லி அவனை அனுப்பிவிட்டாள்.

ஆனல், கீசகனுக்கோ விரத சாரணியின் ஞாபகம் எப்போதும் இருந்து வந்தது. அவளை எந்த விதத்திலாவது கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென்று ஆவல்கொண்டான். சிறிது காலத் திற்குப் பின்பு ஒருநாள் ராணி முன்யோசனையில்லாமல் ஒரு பூச்

சென்டை விரதசாரணிமூலம் கீசக னுக்குக்கொடுத்தனுப்பினுள். அவ ளைக் கண்டவுடன் முன்போலவே தன்னை விவாகம் செய்துகொள் ளும்படி கீசகன் வேண்டினன். அவள் அதற்குச் சிறிதும் இணங்க வில்லை. பிறகு அவன் வற்புறுத்த ஆரம்பித்தான். ஆனல் விரத சாரணி அந்த இடத்தை விட்டு அரண்மனை சென்று விராடராசன் சமுகம் போய் நின்ருள். கீசகன் அவளைத் துரத்திக்கொண்டு அங் கேவந்து சேர்ந்தான். அப்போது ராஜசபையில் பல உத்தியோகஸ் தர்கள் கூடியிருந்தார்கள். அத ஞல் கீசகனுடைய எண்ணம் நிறை வேறவில்லை. மிகுந்த அவமானத் துடனும் துக்கத்துடனும் அவன் திரும்பிப்போனன்.

அதற்குள் பலாயனனுக்கு இந்த விஷயம் தெரியவந்தது. உடனே அவன் கோபங்கொண்டான். அவனுடைய கண்கள் இரண்டும் சிவந்தன. பற்களை நற நற என்று கடித்தான். கோபத்தால் தேகம் நிலைகொள்ளாமல் அவன் துடித்தான். அவனுடைய தலைமயிர்கள் செங்குத்தாய் நிமிர்ந்து நின்றன.

"இப்போதே கீசகனுடைய அரண்மனை சென்று அவனை ஒரு நொடியில் கொன்றுவிட்டு வருவேன்" என்று பலாயனன் விரதசாரணியினிடம் கூறினான். உடனே அவள், "செய்யுங்காரியத்தை நன்றாக யோசித்துச் செய்யவேண்டும். இப்போது உங்களை இன்னாரென்று ஒருவரும் தெரிந்துகொள்ளாமலிருக்கவேண்டுமே. ஆதலால்

ஜாக்கிரதையாக இருக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்" என்றனள்.

பிறகு பலாயனனும் விரதசாரணியும் நெடுநேரம் யோசனை செய்து கீசகனை வஞ்சனையால் வதைக்க வேண்டுமென்று முடிவு செய்துகொண்டார்கள். அதன்படி விரதசாரணி, "இன்று ராத்திரி பத்து நாழிகைக்குள் இந்நகரத்துக்கு வெளியேயுள்ள தோட்டத்திற்கு வருகிறேன். அப்போது நீயும் அங்கு வந்தால் உன்னை எனக்குத் தலைவனாகஏற்றுக்கொள்கிறேன்" என்று கீசகனுக்குச் சொல்லியனுப்பினுள். அந்தச் செய்தி வந்தவுடன் கீசகன் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தான். எப்பொழுது அஸ்தமிக்கப் போகிறதென்று ஆவலோடு எதிர்பார்த்துக்கொண் டிருந்தான். ஒவ்வொரு நிமிஷமும் அவனுக்கு

ஒவ்வொரு யுகமாக இருந்தது. அவளுக்குக் கொடுக்கும்பொருட்டு அவன் பலவிதமான விலையுயர்ந்த ஆடை ஆபரணங்களை எடுத்துக் கொண்டான். குறிப்பிட்டபடி பத்து நாழிகைக்குள் அந்தத் தோட்டத்திலுள்ள மண்டபத்திற்குக் கீசகன் வந்து சேர்ந்தான். அந்த மண்டபத்தில் கீசகன் உத்தரவுப்படி ஒருவித விளக்கும் ஏற்றப்படவில்லை.

கீசகன் அந்த மண்டபத்தை அடைந்துகவனித்துப்பார்த்தான். அங்கே ஒரு பக்கத்தில் ஒரு ஸ்திரீயின் வடிவத்தைக் கண்டான். அந்த வடிவம் விரதசாரணியின் வடிவமாக இருக்கவேண்டுமென்று எண்ணினான். பிறகு அருகில் சென்று தான்கொண்டுவந்த ஆபரணங்கள் முதலியவற்றை அவளி

டம் கொடுத்தான். அவைகளை வாங்கிக் கொள்வதற்காக அந்த வடிவம் வலக்கையை நீட்டவே கீச கன் ஆனந்தக் கடலில் மூழ்கினான். ஆனால் நீட்டிய கையானது அவன் கொடுத்த ஆபரணங்களை வாங்கா மல் அவனுடைய இடக்கையை உறுதியாகப் பிடித்து நெருக்க ஆரம்பித்தது. கீசகன் தன் கை யை விடுவித்துக்கொள்ளப் பல தரம் முயன்றான். சிறிதும் பயன் படவில்லை. அவனுடைய கையென் புகள் நொறுங்கின. அதனால் உண் டான வலி அவனால் பொறுக்க முடியவில்லை. அவன் பெரிய கூ ரலெடுத்துக் கதறினான்; பின்பு பலா யனனை விட்டு ஓடிப்போக எண் ணினான்; அதுவும் பலிக்கவில்லை.

மறுபடி அந்தப் புதிய வடிவம் தனது இடக்கையை நீட்டிக் கீசக

னுடைய வலக்கையை உறுதியாகப் பிடித்துக்கொண்டது. கீசகன் அந்தப் பிடியைவிட்டு விலகிக்கொள்ள முயன்றான்; கூத்தாடினான்; குதித்தான்; துள்ளினான்; கூச்சலிட்டான். ஆனால் அந்த வடிவம் வாய் பேசாமல் ஒரே உறுதியாக நின்று கீசகனுடைய இடுப்பைச் சுற்றிப் பிடித்துக்கொண்டது. அப்போது கீசகன், "என்னோடு இப்படி விளையாடலாமா? கலியாணம் பண்ணிக் கொள்வதற்கல்லவோ நான் வந்திருக்கிறேன்? என்னை விட்டுவிடு. நான் போகிறேன்" என்று கெஞ்சினான். ஆனால் அந்த வடிவம் வாய்திறந்து ஒரு வார்த்தை யாவது பேசவில்லை. கீசகனை அப்பால் போகவிடவுமில்லை. கீசகன் ஒருவேளை விரதசாரணி தன்னை ஏமாற்றியிருப்பாளோவென்று அப்

போது எண்ணினான். விரதசா ரணி தான் வாராமல் தன் கணவனை மாறு வேஷத்தில் அனுப்பியிருக் கலாமென்று பயந்தான். தன் கண வன் தெய்வப் பிறப்புள்ளவனெ ன்று விரதசாரணி கீசகனிடம் ஒரு முறை சொல்லியிருந்தாள். அப் போது அந்த ஞாபகம் அவனுக்கு வந்தது. ஆகையால் வந்தது வாட்டுமென்று கீசகன் வீணான தைரியத்துடன் தன் கைகள் இர ண்டையும் மிகவும் பலமாக உதறிக் கொண்டு நகர்ந்தான்.

அப்போது அந்த வடிவம் பெருங்குரலோடு சிரித்தது. அதைக் கவனிக்கவே கீசகனுக்குப் பயம் அதிகரித்தது. மகா பலசாலியான ஒரு சத்துருவோடு தான் சண்டை போடவேண்டுமே யென்று அப் போது நினைத்தான்; பின்வரு

மாறு தனக்குள் சொல்லிக்கொண் டான்: "நாமோ கலியாணம் செய்துகொள்ள இங்கு வந்தோம். எல்லாம் விபரீதமாக இருக்கிறதே. ஒருவேளை மணமே மரணமாக முடியுமோ! ஒருநாளும் நமக்கு மரணம் நேராது. நாமும் ஒரு தெய்வப் பிறப்புத்தானே. அவனுக்கு உள்ள பலம் நமக்கில்லையா?" என்று இவ்வாறு தனக்குள் சொல்லிக்கொண்டு நசுங்கிய தன் கைகள் இரண்டையும் காற்றில் வீசிக்கொண்டு நின்றான். அதற்குள் வேஷத்தைக் கலைத்துவிட்டுப் பலாயனன் தன் உண்மை வடிவத்துடன் தோன்றினான். கீசகன் புன்னகைகொண்டு அவனைப் பார்த்து, "அடே நீயா! அடுப்பங்கரை வீரனா! நீயா இவ்வளவு பாடுபடுத்தினாய்? படையா! அதி சீக்கிரத்

தில் உனக்குப் புத்தி கற்பிக்கிறேன்; பார். மகா அற்பனாகிய நீ உன் சேஷ்டைகளை உனக்கு மேலான என்னிடமா காட்டுகிறாய்?" என்று கடுகடுத்த முகத்துடன் அதிவேகமாக அவன்மேல் பாய்ந்தான். அப்போது பலாயனன் கொஞ்சம் இருந்த இடத்தைவிட்டுத் திடீரென்று பின்னால் விலகிக் கொண்டான். அதனால் கீசகன் பாய்ந்த வேகத்தில் பலாயனனைத் தாண்டி வெகு தூரத்துக்கப்பால் போய் விழுந்தான். உடனே பலாயனன் கீசகன்மேல் ஏறி உட்கார்ந்து அவனுடைய கழுத்தை ஒரு கையால் பிடித்து மற்றொரு கையால் அவன் தலையில் பலமாகக் குத்தினான். கீசகனால் வலி பொறுக்க முடியவில்லை. பலாயனனை விட்டுத் தப்பியோடுவதற்கு அவன்

மிக முயன்றான். பலிக்கவில்லை. கடைசியில் கீசகன் மிகவும் முயன்று விலகிக்கொண்டான். உடனே அவனும் பலாயனனும் ஒருவரோ டொருவர் எதிர்நின்று சண்டை போட ஆரம்பித்தார்கள்.

ஒரு நாழிகைவரையில் ஒருவரை யொருவர் பிடிக்க முடியவில்லை. கடைசியில் மிக்க கோபத்துடன் கீசகன் தன் இரண்டு கைகளையும் தூக்கிக்கொண்டு பலாயனனுடைய கழுத்தைப் பலமாகப் பிடித்தான். பலாயனன் தன்னுடைய வலக் கையினால் கீசகனுடைய மார் பில் ஓங்கிக் குத்தினான். அதனால் கீசகன் சிறிதுநேரம் பிரஞ்ஞை அற்றுப் பின்பக்கமாகத் தடுமாறி விழுந்தான். நல்ல வேளையாய் ஒருமரம் அவனைத் தாங்கிக்கொண் டது. இருவர் சண்டை போடுவ

தையும் மரங்களின் மத்தியில் ஒளி ந்து கவனித்துக்கொண் டிருந்த விரதசாரணியைப் பலாயனன் அப் போது பார்த்துப் புன்னகை கொ ண்டான்.

இதற்குள் மூர்ச்சை தெளிந்து கீசகன் மின்னலைப்போல் ஒரே பாய்ச் சலாகப் பலாயனன் மேல் பாய்ந் தான். தன் கைகளால் பலாயன னைத் தூக்கித் தலைக்குமேலே சுழ ற்றி ஒரு பெரிய பாறையின்மேல் வீசியெறிந்தான். உடனே பலா யனனுடைய வாயிலிருந்தும் மூக் கிலிருந்தும் ரத்தம் தாரைதாரை யாகப் பெருகிற்று. அவன் பிணம் போல் கீழே விழுந்துகிடந்தான். அவன் இறந்திருக்கலாமென்று கீசகன் எண்ணி விரதசாரணியைப் பற்றி நினைக்கலானான். "அவள் இங்கேதான் இருப்பாள்" என்று

தானே நினைத்துக்கொண்டு அங்கு மிங்கும் போய் அவனைத் தேடலா ஞன். அதற்குள் பலாயனன் மூர் ச்சை தெளிந்து எழுந்து தன் பகை வனை நான்கு பக்கங்களிலும் தே டிப்பார்த்தான். அவன் கண்ணு க்கு அப்போது கீசகன் அகப்பட வில்லை; ஆனால் சில அடையாளங் களைக்கொண்டு அவன் இருப்பதைத் தெரிந்துகொண்டான். சிறிதும் சத் தம் செய்யாமல் பலாயனன் கீசகன் மேல் பாய்ந்து தன் சக்தியையெல் லாம் உபயோகித்து அவன் தலை யில் அடித்தான். அந்த அடி விழு ந்தவுடனே கீசகன் திடுக்கிட்டு மயங் கிக் கீழே விழுந்துவிட்டான். அப் போது பலாயனன் அவன் கைகள் இரண்டையும் பின்புறமாகச் சேர் த்துக்கட்டினான். அவனை அப் படியே தூக்கித் தலைகீழாக அவ்

விடமிருந்த ஒரு கிணற்றுக்குள் எறிந்தான். கிணறு மிகவும் ஆழமானது. கிணற்றிலிருந்து ஒரு பெரிய சத்தம் உண்டாயிற்று. கையையும் காலையும் உதறிக்கொண்டு கீசகன் மேலே கிளம்பிவரப் பார்த்தான்; முடியவில்லை. அவன் மூக்கிலும் வாயிலும் ஜலம் புகுந்துகொண்டபடியால் அவன் மூச்சுவிடமுடியாமல் திணறிச் சிறிது நேரத்தில் உயிர் துறந்தான்.

ஆனல் பலாயனனே கீசகனை அந்த மட்டில் விடவில்லை. ஒரு கட்டையைக் கொண்டு கிணற்றிலிருந்து அவனை மேலே தூக்கினான். ஒரு பாறையின்மேல் உட்கார்த்தினான். அசைந்து விழாமல் இருப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்துவைத்தான். கீசகன் விரதசாரணிக்காகக் கொண்டு




ஒரு பாறையின்மேல் கீசகனுடைய பிணம்

வந்திருந்த ஆபரணங்களை யெல்லாம் பாறையின் முன்னே வைத்தான். ஒரு பனையோலையில், "பாவத்துக்குக் கூலி மரண தண்டனை" என்று எழுதிப் பிணத்தின் தலைக்கு மேலே கட்டினான்.

அப்போது விடியும்நேரமாயிற்று. பலாயனன் அருகிலிருந்த ஒரு குளத்தில் இறங்கி ஸ்நானம் செய்தான். பிறகு அவனும் விரதசாரணியும் வேகமாக அரண்மனை சேர்ந்து தங்கள் வேலைகளைச் செய்ய ஆரம்பித்தார்கள். ஒரு விஷயமும் தெரியாததுபோல் அந்த இரண்டு பேர்களும் தங்கள் வேலைகளைக் கவனித்தார்கள்.

பொழுது விடிந்தது; சூரியன் உதயமானான். நகரத்தில் ஜனங்கள் அங்கங்கே கூட்டம் கூட்டமாக வந்தார்கள். "ராத்திரி மாத்

தோப்பில் பயங்கரமான சத்தம் ஏதோ கேட்டதல்லவா?" என்று ஒருவரையொருவர் ரகஸ்யமாகக் கேட்டனர். கேட்டதாகத் தலையை அசைத்து ஜாடை காட்டினார்களே யல்லாமல் வாயைத் திறந்து 'ஆமாம்' என்று ஒருவரும் சொல்ல வில்லை; அவர்கள் அவ்வளவு பயத்தோடு இருந்தார்கள். கீச கனுக்கு ஏதோ ஆபத்து நேரிட் டிருக்கலாமென்று எண்ணினார்கள். உடனே எல்லாரும் புறப்பட்டு மாந்தோப்புக்குப் போனார்கள். அங்கே கீசகன் பிணமாய் இருப்ப தையும் பிணத்தின் தலையில் பனை யோலை கட்டப்பட்டிருப்பதையும் பார்த்து மிகவும் ஆச்சரியமுற்றார் கள்.

இந்தச் செய்தி நகரம் முழுவ தும் ஒரு நொடிப்பொழுதில் பரவி

விட்டது. "ஐயோ, கீசகன் இறந்துபோய் விட்டானே!" என்று வருத்தமடைந்தவர் ஒருவரும் இல்லை. ஆனால், தங்கள் ராஜ்யத்தைக் காப்பாற்றத்தக்க மனிதன் வேறு இல்லையே யென்று விராடமன்னனும், ராணியும் கவலையுற்றார்கள். பலாயனன் எவ்வளவோ முன் ஜாக்கிரதையோடிருந்தும், விடியற்காலம் வயல்களுக்குப் போன சில குடியானவர்கள், மாந்தோப்பிலிருந்து பலாயனனும் விரதசாரணியும் திரும்பி வந்ததைக் கவனித்தார்கள். அதுமுதல் நகரத்து ஜனங்கள் பலாயனன் பெயரைக் கேட்டமாத்திரத்தில் நடுங்க ஆரம்பித்தார்கள்.

பிள்ளைகளே, பலாயனன் பீமசேனனேயல்லாமல்வேறொருவனும் அல்லன். பகாசுரனைக்கொன்றவீரன் இவனே. பீமசேனனுக்கு ஜனங்

களைக் கொல்வதில் சிறிதும் விருப்பமில்லை. ஆனால் துஷ்டர்களை நாசம் செய்யவேண்டுமென்ற பிடிவாதம் அவனுக்கு உண்டு. அதுபோல், உங்களால் செய்யக்கூடிய உதவிகளைப் பிறருக்கு எப்போதும் நீங்கள் செய்யவேண்டும்.

PRINTED AT THE C. L. S. PRESS, MADRAS—1928

எலிமெண்டரி பாடசாலை லைப்ரரிக்கு மிகவும்
உபயோகமானவை

## கீழ்நாட்டுக் கதைகள்

| | | அ. | பை. |
|---|---|---|---|
| பகுதி **1.** | இரண்டாவது மூன்றாவது வகுப்புக்களுக்கு | | |
| நம்பர் | 1. ஹிதோபதேசக் கதைகள் முதற் பாகம் ... | 2 | 6 |
| ,, | 2. ,, இரண்டாம் பாகம் ... | 2 | 6 |
| ,, | 3. நந்தவனச் சிறு கதைகள் ... ... ... | 2 | 6 |
| பகுதி **2.** | 3-வது, 4-வது வகுப்புக்களுக்கு | | |
| நம்பர் | 1. பாரசீகக் கதைகள் முதற் பாகம் ... ... | 3 | 0 |
| ,, | 2. ,, இரண்டாம் பாகம் ... | 3 | 0 |
| ,, | 3. கதாசரித் ஸாகரக் கதைகள் ... ... | 3 | 0 |
| பகுதி **3.** | 5-வது, 6-வது வகுப்புக்களுக்கும் 1-வது பாரத்திற்கும் | | |
| நம்பர் | 1. ஸ்ரீ ராமர்கள் பிறப்பும், வனவாசமும், சங்ராமமும் ... ... ... ... | 4 | 0 |
| ,, | 2. உத்தர ராமாயணக் கதைகள் ... ... | 4 | 0 |
| ,, | 3. ஸாத்ரியின் விவேக விளக்கம் ... ... | 4 | 0 |
| பகுதி **4.** | 6-வது, 7-வது வகுப்புக்களுக்கும் 1-வது, 2-வது பாரங்களுக்கும் | | |
| நம்பர் | 1. மகாபாரதக் கதைகள் முதற் பாகம் ... | 4 | 6 |
| ,, | 2. ,, இரண்டாம் பாகம் ... | 4 | 6 |
| ,, | 3. தூபனும் நஸ்தாமனும் ... ... ... | 4 | 6 |
| பகுதி **5.** | 8-வது வகுப்பிற்கும் 3-வது, 4-வது பாரங்களுக்கும் | | |
| நம்பர் | 1. மன்னவனும் மாணிக்கங்களும் ... ... | 5 | 0 |
| ,, | 2. வேதாளக் கதைகள் ... ... ... | 5 | 0 |
| ,, | 3. ஹாதிம்தாயின் வீரச்செயல்கள் ... ... | 5 | 0 |

இக்கதைகள் ஒரு பெரிய தமிழ்ப்புலவரால்
எளிய நடையில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றன.